ஸ்ரீநகரம்

# ஸ்ரீ மாமேரு அன்னை

## போற்றிப் பாமாலை



வெளியிடுவோர்:

**ஸ்ரீ மாமேரு டிரஸ்ட்**

4, அ[illegible]மந்தா சாலை, பாலாஜி நகர்

சென்னை - 600 014

# கோமாதா



சுவாமி முருகபூஷணம் தயாரித்த முதல்மேருவை கலவையில் ஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமிகளின் அனுக்கிரகம் பெற்று காஞ்சி திரும்பியபோது, மேருவை நோக்கி ஓடிவந்து-ஒரு பசுங்கன்று நின்ற அதிசயக் காட்சி!

உ

ஸ்ரீ நகரம்

# ஸ்ரீ மாமேரு அன்னை போற்றிப் பாமாலை

பண்ருட்டிக் கண்டிகை
ஸ்ரீ மாமேரு தியான நிலையத்தில்
கோயில் கொண்டுள்ள
ஸ்ரீமாமேரு, ஸ்ரீ வாராஹி, ஸ்ரீ ராஜமாதங்கி
மற்றும் 16 நித்தியா தேவிகளைத் துதித்து
19 கவிஞர்கள் பாடிய பாடல் தொகுப்பு

தொகுப்பாசிரியர் :
அருளிசைக் கவிச்செல்வர்
**கவிமாமணி தமிழ்மாறன்**

பதிப்பாசிரியர் :
**அரிமா எம். ஹரிராம்** அவர்கள்

வெளியிடுவோர் :
**ஸ்ரீ மாமேரு டிரஸ்ட்**
**4, அனுமந்தா சாலை,**
**பாலாஜி நகர், இராயப்பேட்டை,**
**சென்னை–600 014.**

விலை ரூ. **10/-**

# தொகுப்புரை

‘‘சங்கீத ஞானமு பக்தி வினா, சன்மார்க்கமு கலதே ஓ மனஸா !’’ என்று கூறினார் சத்குரு ஸ்ரீதியாகராஜ சுவாமிகள். இசையின் வழியே இறைவனைக் காணும் நெறியை, ‘நாதோபாசனை’ எனக் குறிப்பர் முன்னோர். பக்தியை வளர்க்க, இசை வழியே வரும் பாடல்கள் மிகுதியும் துணை போவது கண்கூடு. ஆழ்வார்களும் நாயன்மார்களும் தமிழ்நாட்டில் பக்தி நெறியை இசை மூலம் வளர்த்தனர். கர்நாடகாவில் ஸ்ரீபுரந்தரதாஸரும், வங்கத்தில் ஸ்ரீ சைதன்ய மகாபிரபுவும், ராஜஸ்தானில் மீராபாயும், மகாராஷ்டிர மாநிலத்தில் துக்காராம் போன்ற மகான்களும் ஆந்திராவில் போதன்னா, பக்த ராமதாஸ், அன்னமாச்சார்யா போன்ற பக்திமான்களின் தொண்டினாலும், அருளிசை வளர்ந்தது.

தமிழகத்தைப் பொறுத்தவரை, தமிழிசையை பக்திநெறியோடு-வளர்த்தவர்களில் சீர்காழி அருணாசலக் கவிராயர், சிதம்பரம் கோபாலகிருஷ்ண பாரதியார் ஆகியோருக்கு முக்கிய பங்குண்டு. ஒரு விதத்தில் மகாகவி பாரதியும்-இந்த சிறப்புக்கு உரியவரே! ‘‘பாட்டினைப்போல் ஆச்சரியம் பாரின் மிசை இல்லையடா !’’ என்று வியக்கும் பாரதி சக்தியை, கண்ணனை, அல்லாவை, விநாயகனை என்று பல தெய்வங்களுக்கும் போற்றிப் பாமாலை சூடியுள்ளார். ஒரு தலத்தின் மகிமையைக் கூறும் போது, ‘‘இது பாடல் பெற்ற ஸ்தலம் !’ என்று கூறிப் பெருமை கொள்வர். நிற்க.

‘‘ஸ்ரீமாமேரு தியான் நிலையம்’’ அமைவதற்கு 3,4 ஆண்டுகளுக்கு முன்னரேயே, இங்கு சக்திக்கு ஓர் ஆலயம்

அமையுமென்று முருக உபாசகர் திரு. பி.எம். சுவாமி அவர்கள் ஒரு விழாவில் கூறியது எனக்குப் பசுமையாக நினைவிலிருக்கிறது. ஸ்ரீமகாமேரு, ஸ்ரீசக்ரம் போன்ற தெய்வீக சாதனங்களை உருவாக்கி வழங்கிக் கொண்டிருக்கும் ஸ்ரீ வித்யா உபாசகர்-சுவாமி முருக பூஷணம் அவர்களுக்கு, ஸ்ரீ மாமேரு தியான நிலையத்தை' அமைக்கும் நல்வாய்ப்பு, அன்னை பராசக்தி அருளால் வாய்ந்தது, நமது பேறாகும்.

பூரண ஸ்ரீ மகாமேரு-பதினாறு நித்யா தேவிகள், மற்றும் ஸ்ரீவராகி-ஸ்ரீராஜமாதங்கி சகிதமாக, யந்திர வடிவில் எழுந்தருளியிருந்து, அருள் பாலிப்பது, உலகிலேயே ஸ்ரீமாமேரு தியான நிலையத்தில்தான் என்று உறுதியாகக் கூறலாம்.

''ஒளி நின்ற கோணங்கள் ஒன்பதில் மேவி உறைபவளே'' என்று ஸ்ரீஅபிராமிபட்டர் துதிக்கின்ற ஸ்ரீமாமேரு அன்னை மற்றும் பரிவார தேவிகளை, பத்தொன்பது கவிஞர்கள் பாமாலையாகப் பாடியதனை, அடியேன் இங்கு தொகுத்து அளிக்கின்ற நல்வாய்ப்பை, ஸ்ரீமாமேரு டிரஸ்ட் எனக்கு வழங்கியிருக்கிறது! ஏழிசை வல்லபர் திரு. எம். கே. தியாகராஜ பாகவதரின் மைத்துனரும், இசையில் நிரம்பப் பாண்டித்தியமும் பெற்றுள்ள ஸ்ரீமாமேரு டிரஸ்டின் தலைவர் சுவாமி முருகபூஷணம் அவர்களின் பரிபூர்ண ஆசியுடன் இந்நூல் வெளிவருவது மிகவும் பொருத்தமே !

''ஸ்ரீமாமேரு தியான நிலையம்'' உருவாக, ஆரம்பத்திலிருந்தே உடலாலும், உள்ளத்தாலும், பொருளாலும் பல பணிகளைச் செய்து தரும் வள்ளல், தொழிலதிபர், அரிமா ஏ. எல். செல்லையா அவர்கள் ''ஸ்ரீ மாமேரு அன்னை போற்றிப்பாமாலை'', வெளிவரப் பொருளுதவி செய்து உதவியதை அடியேனால் மறக்க இயலாது. டிரஸ்ட் ஸ்தாபகர் சுவாமி முருக பூஷனம் அவர்களுக்கும், வள்ளல் உயர்திரு ஏ.எல். செல்லையா அவர்களுக்கும் கவிஞர்கள் சார்பில் எனது வணக்கங்களையும், நன்றியறிதலையும்

புலப்படுத்திக்கொண்டு, ஸ்ரீமாமேரு அன்னை அருளால் எல்லா நலன்களையும் அவர்கள் பெற்றிட வேண்டிப் பிரார்த் திக்கிறேன்.

இந்த நூலை நவராத்ரி விழாவில் வெளியிட அன்புடன் இசைந்த ஸ்ரீமாமேரு தியான நிலைய வளர்ச்சி மேம்பாட் டுக் குழுவின் தலைவர், சாத்வீகமாமணி உயர்திரு எம். சாந்திலால்ஜெயின் அவர்களுக்கும் பாமாலை பாடிய புலவர் பெருமக்களுக்கும், மிகக் குறுகிய கால அவகாசத்தில் அழகுற அச்சியற்றித் தந்த ஸ்ரீ சுரபி அச்சகத்தார்க்கும் என் சார்பி லும், 'டிரஸ்ட்' சார்பிலும் நன்றி தெரிவிக்கிறேன்.

''தனம் தரும் கல்விதரும் ஒருநாளும் தளர்வறியா
மனம் தரும் தெய்வ வடிவும் தரும்நெஞ்சில் வஞ்சமில்லா
இனம் தரும் நல்லன எல்லாம் தரும் அன்பரென்பவர்க்கே
கனம் தரும் பூங்குழலாள் அபிராமி கடைக்கண்களே!''

''யாருமில்லாதவர்க்கே யார் துணை?
ஆறுதல் அளிப்பதில் யார் அன்னைக்கிணை?''

29-9-94
சென்னை-28

அன்புடன்
**தமிழ்மாறன்**
(தொகுப்பாசிரியர்)

# ஸ்ரீ மாமேரு அன்னை!

திருமகளும் கலைமகளும் தொண்டாற்றி உந்தன்
திருவடிகள் தொழுதேத்தித் தமதாற்றல் பெற்றிடவே,
உறுகணவன் மேனிதனி லொருபாகம் தானாகிப்
பெருமையோடு பொலிகின்ற பெருந்தேவி நிந்தன்
கருணையினாற் கருவளரும்! பொறுமையினா லறம்வெல்லும்
அருளதனால் அவனிதனி லாருயிர்கள் நலமோங்கும்!
இருளகற்ற இம்மையிலே பண்ருட்டிக் கண்டிகையில்
ஒருமேருவி னுருவாகி உலகுய்ய - வருந்தாயே!

வருந்தாமல் யாமிருக்க விருந்தாக வந்தெம்மைப்
பொருத்தா வல்வினைகள் பொடியாகப் போயுகவே,
அருங்கயிலை மலைதுறந்தே அண்ணலுடன் ஒருருவில்
ஒருங்குநீ மேருவென ஓங்கார வடிவாகி
'ஓம்ஐம் ஹ்ரீம்ஸ்ரீம்' என்கின்ற ஒலியாகி
ஒன்பதெனக் கோணத்தில் ஓங்கியுயர் தேவியாய்,
தென்புலத்தார் பாசமொடு வருமுன்னே, விழிகாட்டி
மன்பதையில் மங்கலம்தா, 'மாமேரு'-நாயகியே!

நாயகியாய்ப் பதினாறு தேவிகளின் தாயாகி
வாயுவுடன் ஐம்பூதம் ஆட்டிவைக்கும் தலைவிநீ!
ஓய்வின்றிக் கதிரவனை உலாவரச் செய்பவள்நீ!
தேய்ந்துமறை நிலாவளரும், நின்னுடைத் தயையாலே!
ஆயகலைகள் அறுபத்தி நான்குடனே அறிவு
வாய்ந்திடவும் எமக்கோ சியாமளையாய் வருகின்றாய்!
ஏய்ந்திடும் பகைதன்னை வென்றிடவே வாராகி
ஆய்வந்தே காக்கின்ற காமாட்சி அன்னையும்நீ!

சதாசிவப் ரேத சிம்மாசனி! பர
சிதாகாச வெளியில் சதா நிவா சினி! பிற
சேதன அசேதன வஸ்துசுக வாசினி! சிவ
நாதன் நமச்சிவாய தேக விலாசினி!

திரிகோண மத்தியில் திகழும் பெரு சோதி நீ!
திரியாத மனத்தவர் தியானமதில் வருதி நீ!
உறங்கும் குண்டலியில் உரகமதின் ரூபமாகிக்
கரங்கு போலுயர்ந்து கமல மாயிரத்தில் அமுதமாகும்—

(வேறு)

அன்னைநீ! அருள்நீ! முன்னைநீ! முதல்நீ!
பின்னைநீ! அழியாக் கன்னிநீ? கருநீ!

பகலில் கதிர்நீ! இரவில் மதிநீ!
புகல் நீ! புவி நீ! புலவோர் கவி நீ!

அகலின் ஒளி நீ! அதன் கீழ் நிழல் நீ!
அகலாப் பொருள்நீ! அறிவின் திருநீ!

குலமாதர்களின் சிவ-குங்குமம் நீ!
தவ மாமுனிவோர் உளம்-தென்படும் நீ!
பவமாயையினால் பல-ரூபமும் நீ!
சிவையே இறைவன் இடப் பாகமும் நீ!

ஸ்ரீநகரம்தனில் புகழுடனே-அண்ணன்
ஸ்ரீதரன் தருகின்ற ஸ்ரீதனம் நீ! எண்ணும்
ஸ்ரீசக்ர மேருவில் சிவனுடனே! என்றும்
ஸ்ரீபுரம் மேவிடும் நாயகி நீ! தெய்வநாயகி நீ!

கவிமாமணி தமிழ்மாறன்

# ஸ்ரீ வாராஹி

பாராளும் சக்தியென பக்தரது முக்தியென
பரிவுகாட்டும் தெய்வமே
ஓராயிரம் கோடி உயிர்வகைகளை மண்ணில்
உலவவைக்கும் நங்கையே
தீராத வினையழிய திரிபுரசுந் தரிதேவி
தீண்டும் படைச் செல்வியே
வாராஹியே நித்ய தேவியே ஸ்ரீமேரு
வாழ்கின்றபொன் வடிவமே !

தண்டினி பஞ்சமிஎன்றும் தண்டநாதை என்றும்
தரணிபோற்றும் தலைவியே
தண்டாயுதம் கத்தி கேடயமுடன் சங்கு
சக்கரமதும் ஏந்தியே
வண்ணமுறு மஞ்சளதில் பொன்னணிகள் ஆடையுடன்
வந்துநிற்கின்ற திருவே !
பண்ணிலொரு பாமாலை பகளாமுகி வந்து
பாரென்னை வாராஹியே !

இடிமின்னல் பூகம்பம் எதுவரினும் என்னவுன்
இருபதமெனைக் காக்குமே !
கடியவிட தேள்பாம்பு மிருகங்கள் யாவுமுன்
கண்களுக்கே அஞ்சுமே
கடிதான துன்பங்கள் காலபயம் என்றாலும்
காதவழிதான் ஓடுமே
மடியுமுன் என் மடமை நீக்குமொரு ஞானமே
மாமேரு வாராஹியே !

வலிமையுறு வராகங்கள் இழுக்கின்ற தேரிலே
வாகான ஐந்தட்டிலே
பொலிவுபெற உலவவரும் புயல்நங்கையே எனது
புலனைந்ததன் காவலே !
நலிவுபிணி குறைவயது குலையவைக்கா திங்கு
நன்மையருளும் இறைவியே
கலியுலவு நிலவுலகில் கண்கண்ட அன்னையே
கருணையே வாராஹியே

ஓதவெளி தாகவுள உன்நாமமே துணை
உள்ளதுண்டோ உவமையே !
பாதமுன தென்மனதிலே படிய விலகுமே
பாவவினைகள் தொல்லையே
பாதக நினைப்பழியவே அருளும் அம்மையே
பகையனைத்தும் சாயுமே
வேத முத லானவனின் பாதியுறை அங்கமே
வெற்றிதரும் வாராஹியே !

–கவிமாமணி வவேசு–

# ஸ்ரீ சியாமளா (ராஜ மாதங்கி)

பச்சைநிற மேனியள்! செம்மைநிற ஆடையள்!
ரத்னமய ஆசனத்தில்
இச்சையுடன் வீற்றிடும் வித்தகியே 'சியாமளா'
உன் வடிவம் என்மனத்தில்!

மெச்சுகிற சித்திகள் அத்தனையும் தரவல்ல
மின்னலிடை சுந்தரீ நீ!
மேலான ஸ்ரீலலி தாபர மேஸ்வரியின்
மேன்மைமிகு மந்திரீ நீ!

ஒலிவீணை கையிலே! ஒருகாலோ மரையிலே!
உயர்நிலவு தலைமீதிலே!
உன்னருள் வேண்டியுனை உச்சரிப்போர்பெயர்
ஒளிவீசும் நிலமீதிலே!

அன்னையே! உன்னையே முப்போதும் எப்போதும்
அன்போடு வேண்டுகின்றேன்!
அருள்கூட்டி இருளோட்டும் உன்பார்வை யால்துன்ப
அலைகடல் தாண்டுகின்றேன்!

உலகியல் இன்பத்தை ஊட்டியே பேரின்ப
உச்சிக்கு அழைப்பவள் நீ!
உயர்வான சங்கீதம், நுண்கலைகள், கல்விஎன
உயிரிலே தழைப்பவள் நீ!

சங்குநிகர் மங்கலத் தங்கக் கழுத்திலே
செங்கழுநீர் மாலைசூடி
தாயாய் எழுந்தருளும் ஸ்ரீ சியாமளா தேவி
தருகின்ற ஞானம் கோடி!

ஆன்மீகப் பாலினை அகிலத்தில் உள்ளோர்க்கு
அன்றாடம்தான் பொங்கியே
அளித்துக் களிக்கின்றாய் அன்பான தேவியே!
அருள்ராஜ மாதங்கியே!

வாக்தேவி சியாமளா! வளர்தேவி சியாமளா!
வந்திக்கி றேன்உன்னையே!
வற்றாத அருள்தரும் உன்னாலே எந்நாளும்
சந்திக்கி றேன்நன்மையே!

**கவிமாமணி மதிவாணன்**

# ஸ்ரீ காமேஸ்வரி

உலகச் சுகங்களின் உருவே போற்றி !
வலமார் சிவனுறை வடிவே போற்றி !

தோகைக் கரும்பும் தோய்மதுக் கலசமும்
வாகைக் கணையும் வாய்த்தவள் போற்றி !

அங்குசம் பாசம் அருளும் ஒளிக்கரம்
தங்கிடும் கருணைத் தாயே போற்றி !

பூமேல் பாதம் பொருந்திட அமர்ந்தாய்
காமேஸ்வரி உன் கழல்கள் போற்றி !

வானம் குளிர்ந்து வருமழை போலும்
ஆனந்தங்கள் அனைத்தும் வேண்டும் !

ஆவர ணத்தில் ஒன்பதாம் தேவி
நீவரம் தந்திடும் நிம்மதி வேண்டும் !

துணையாய்த் தாயுன் தூய பார்வையால்
இணையாக் குடும்பம் இணைபெற வேண்டும் !

நிராதர வாய் நின்றது நீங்கி
வராத சுகங்கள் வந்திட வேண்டும் !

மாமே ருக்குள் நித்யா தேவியாம்
காமேஸ்வரித் தாய் கமலம் சரணம் !

புன்னகை என்னும் பூஷணம் கண்ட
அன்னை மலரடி அனுதினம் சரணம் !

முதற்பெருந் தேவி மூலவர் மயங்கும்
நுதற் பெருந்தேவி நுண்ணடி சரணம் !

கண்டிகை நன்னகர் காத்திருந் தருளும்
சண்டிகை ஒளியே ! சரணம். சரணம் !

—கவிமாமணி இளையவன்

# ஸ்ரீ பகமாலினி

பங்கயக்கரத்தினை
பார்நீந்து அண்டங்கள்
பருவங்கள் உண்டாக்கினை
செங்கதிர்த் தோட்டத்தில்
சிறுமலர்ப் பிறை நிலவை
சென்னியில் செண்டாக்கினை
மங்கலம் தருகின்ற
மகமேரு நாயகி
மனதிலெழு பகமாலினி
பொங்கிவரு ஞானபரி
பூரணி நாரணி
போற்றினோம் கருணை செய்வாய்.

கருணைக்கிருப்பிடம்
காலங் கடந்தவள்
கருமேகம் உன் நன்கொடை
வருணிக்க முடியாத
வளர்கின்ற பேரழகி
வானவில் உன் கைப்படை
இருள்நீக்கி ஒளி பாய்ச்சும்
எண்ணத்தில் அருள் ஓச்சும்
இயல்புடைய பகமாலினி
தருணத்தில் வந்து கை
தந்துதவும் அன்னை நீ
தாளடியில் மாலையிடுவோம்.

மாலையில் கதிரவன்
மறைகின்ற காலத்தில்
வானத்தில் அழகு காட்டி

கோலமாய் சிந்துரக்
குழம்பிலே தன் நிறம்
முழுதுமாய்த் தெரியக்கூட்டி
வாலை நீ நிதநிதம்
வாழ்கின்ற கவிதையாய்
வளர்கிறாய் பகமாலினி
மூலமா மந்திரம்
ஓங்காரமாய் நிற்கும்
முத்தி தரும் லிங்கமானாய்.

லிங்கம் நீ பேரண்ட
ரூபம் நீ அணுவிலும்
லேசான பரமாணு நீ
தங்கம் நீ தகரம் நீ
தக்கை நீ வளர்ப்பின்றித்
தான் தோன்றிப் பூண்டும் நீயே
மங்காமல் செய்யும் ஒரு
மருந்தாகிக் காணுவாய்
மாமாயப் பகமாலிநீ
எங்கும் நிறைந்த நீ
எவர்கண்ணும் காணாத
இன்பம் உனை நெஞ்சில் நினைவோம்.

நினைத்திடப் போதும் உனை
நீண்டுயிர் வளர்ந்திடும்
நெஞ்சத்தின் கவலை போகும்
வினைத் தொடர் விளைவுகள்
வெப்புநோய் சீதநோய்
வெங்குட்டம் மறைந்து போகும்
தனிச்சுடர் நாயகி தண்ணருள் கூறவோ
தாயன்புப் பகமாலினி
பனிப்படர் வறுமைபோம்
பாரெலாம் நலமாகும்
பங்கயத் தாள் பணிகுவோம்.

—கவிமாமணி ஐயாறப்பன்

# ஸ்ரீ நித்யக்லின்னா

அருணோ தயமாய் அழகு மிளிரும் அருள்உடையாள்;
கிரணோ தயமாய்க் கிளர்ந்து மனத்துள் கிளுகிளுப்பாள்;
சரணோ தயமாய்ச் சசிகலை மூன்றுமே தன்சென்னியாள்;
தருணோ தயமாய்ச்செந் தாமரை மேல்வைகும்
தாய்இவளே.

செந்தளிர் மேனிச் சிறப்பினள்; முக்கண் செழும்சுடரும்
வந்தொளிர் தெய்வ வடிவினள்; ரத்ன வகைவகையாய்
முந்தொளிரணிகள் முற்றுமே பூண்டு மூன்றாம் நிதியின்
இந்தொளிர் ஸ்ரீ நித்யக்லின்னா என்பாளை ஏத்துதுமே.

ஏத்துவோர்க் கெல்லாம் இளமையும் செல்வமும் இன்பங்களும்
பூத்துவக்கும்படிப் பூரணை யாகுவள் புண்யமெலாம்
வாய்த்துவக்கச் செய்குவாள்; வல்லபம்சேர்பா சாங்குசமும்
காத்துவக் கச்சதுர்க் கைகளுமாம் இவள் காட்சியுமே.

காட்சிக் கினியள்; கருத்துக் கினியள்; கவிதை, கலை
ஆட்சிக் கினியள்;மெய் அன்பர்ப் கினியள்; அருள்எனும்செம்
மாட்சிக் கினியள்; மகத்துக் கினியள்; மனத்தவிசாம்
சாட்சிக் கினியள் ஸ்ரீ சக்கர ராஜசர் வாம்பிகையே.

**சந்தக் கவிமாமணி தமிழழகன்**

# ஸ்ரீ பேருண்டா

தீருண்ட காராக, நீள் கருணை பொழிதற்கு,
யாருண்டு என் தாயே, என்னிடரை நீக்குதற்கு?
வேறுண்டோ விஷமுறிக்க, வெற்றியுடன் வினைமுடிக்க
பேருண்டா நாயகியே, போற்றுகிறேன் நின் பதமே!

விரித்த கருங்குழலில் விந்தைப்பிறைசூடி,
சிரித்த முகங்காட்டி, சீரெல்லாந்தருபவளே:
ஊறித் திளைத்துந்தன் உன்னதக் கருணையிலே,
பூரித்த மனதுடனே, புகழ்வேன்உன் பெருமைகளை?

முத்தோ உன்நிறமே, முல்லை முழுநிலவோ?
ரத்தினமோ காதணிகள்? ரத்தச் சிவப்பேறு
குன்றுமணி மாலைகளோ? குன்றா அருள்ஒளியோ?
நின்றாய் என்நெஞ்சுள்ளே, என்றுமே நான் துதிக்க!

தவமாலை ஒரு கரமும், தாமரை தண் கரமும்,
பவத்தெழு பாற்சங்கம் பொன்னார் திருக்கரமும்,
தவப்பயனைத் தரும் பாதந்தனைக் காட்டுத்
தனிக்கரமும்
அவம் நீக்கி, அணைத்தென்னை ஆட்கொள்வாய்
அருட்கடலே!

மாமேருக் கொலுவேறும் முக்கோணத் தேவியரை,
மாசக்திக் கூறாகும் மாறாத கலைவடிவை,
மனத்தேற்றி வைத்துநிதம் மனங்கசிந்து நின்றாலே
மண்ணோடு, வானகமும் மறுகணத்தே வசமாகும்!

சீருண்டு, செல்வம், சிறப்புண்டு, செல்வாக்கு,
பேருண்டு, பெருமை மிகவுண்டு, பல்கலை
வளமுண்டு
சீர்கொண்ட தேவியர்கள் சிந்தை மகிழ்வுடனே
பேருண்டா நாயகியே, பொழிந்திடுவாய் அருள்
மழையே!

**கவிமாமணி ரா. பா. சாரதி**

# ஸ்ரீ வஹ்நி வாஸினி

இரத்தினங்கள் ஒளிபதித்த மகுடத்தவளே!
விழிமலர்கள் மூன்று கொண்டாய்!
இத்தராதலத்தினுள் விளைகின்ற சொர்ணமென,
ஒளிவீசும் திரு மேனிதான்!
மெத்தென்ற மலர்போன்ற பொன்மலர்த் தாளிணை,
மலரொன்று தாங்கி நிற்கும்!
நித்தியைகள் பதினாறில், ஐந்தாமிடத்திலமர்,
ஸ்ரீ வஹ்நிவாஸி நீயே!

செங்கழுநீர், மலரம்பு, கொம்பு, மாதுளை, வலது
கரங்களை அலங்கரிக்கும்,
செந்தாமரை, சங்கம், கரும்புவில், அமுத மிடக்
கரங்களுக்கழகு செய்யும்;
தங்கமென எட்டுக் கரங்களைக் கொண்டுலகு
தழைக்கின்ற வகை செய்குவாய்
அங்கங்கள் பதினாறில் ஐந்தாம் பிறைக்குரிய
அன்னை ஸ்ரீவஹ்நி வாஸினி!

பூரணப் பொருள் ஒன்று; பொருள் அதன் ஆற்றலால்,
புறப்பட்ட' பராசக்தி!
காரணம் ஆகிய காத்து நிற்கும் லலிதா
பரமேஸ்வரி தேவிநின்,
ஆறொடும் ஒன்பது அங்கங்களாய் மிளிரும்,
அனைவரும் சக்தியன்றோ?
பூரணத்தின் கூறு ஒவ்வொன்றும் ஒளிவீசும்
பூரணம் ஆகுமன்றோ!

**கவிஞர் சக்தி**

# ஸ்ரீ மஹா வஜ்ரேஸ்வரி

பொன்மலர் பாதமுடன் பேரெழில் கொண்டுநீ
புவியினில் வாழுகின்றாய்
கண்மலர் சிரிக்கவே கரும்புவில் அங்குசம்
கரங்களில் ஏந்துகின்றாய்
மென்தளிர் கைகளில் பூமாலை ஏந்திநீ
மேன்மை சேர் ஸ்ரீநகரிலே
தண்ணொளி பரப்பியே தரணியை காத்திடும்
தாயே ஸ்ரீ வஜ்ரேஸ்வரி.

முக்கண்ணைக் கொண்டவள் மூலத்தின் நாயகி
முனிவர்கள் போற்றும் தேவி
எக்கணமும் உன்னைநான் மறவாத நிலையினை
எனக்கு நீ அருளல் வேண்டும்
திக்குகள் எங்குமே உன்னாட்சியல்லவா
துக்கங்கள் தீர்த்து வைப்பாய்
தக்கவர் யாவரும் உன்பதம் நாடுவர்
தாயே ஸ்ரீ வஜ்ரேஸ்வரி.

கருணைசூழ் தெய்வமே கலைகளின் அரசியே
கற்பனைத் தாயும் நீயே
பெருமையாய் என்றுமே போற்றுவேன் உன்னைநான்
புகழோடு என்னைக் காப்பாய்
சிறுமைகள் அகற்றியே சிந்தனை பெருக்கியே
சிறியேனை காத்து நிற்பாய்
தருமமே பெரிதென தகவுடை மனம் தரும்
தாயே ஸ்ரீ வஜ்ரேஸ்வரி.

மாமேரு தேவியின் மரபுடன் முக்கோணம்
மாண்புடன் திகழும் தேவி
பூமேவு சோலைகள் புறமெங்கும் சூழ்ந்திட
புகழோடு அமர்ந்த தேவி

நாமேவும் புன்னகை நளினங்கள் காட்டியே
நன்கலம் நல்கும் தேவி
நாமேவி சந்தங்கள் தருகின்ற செல்விநீ
தாயே ஸ்ரீ வஜ்ரேஸ்வரி.

வளர்பிறை வலமாக தேய்பிறை இடமாக
வலம்வந்து ஆட்சி செய்வாய்
வளர்தொழில் ஓங்கவே செல்வங்கள் பெருகவே
வளமுடன் வாழவைப்பாய்
இருள்தனை மாற்றியே அருள்தனை ஏற்றியே
இதயத்தை மலர வைப்பாய்
மருள்கின்ற மனத்திடை மங்கலம் பொங்கவரும்
மாதா ஸ்ரீ வஜ்ரேஸ்வரி.

பட்டாடை புனைந்துநல் ரத்னஹாரத்துடன்
பவனி வரும் ஸ்ரீதேவியே!
எட்டாத தூரமோ உன்னருள் பாதமே
எண்ணத்தால்அதனை ஈர்ப்பேன்
கிட்டாத தொன்றில்லை நின்னருள் இருக்கையில்
கழலினைப் போற்றி செய்வேன்
இட்டமுடன் நின்கருணை எங்கணும் சூழுமே
தாயே ஸ்ரீ வஜ்ரேஸ்வரி.

கவிஞர் எழிலவன்

# ஸ்ரீ சிவதூதி

ஸ்ரீதேவி சிவதூதி ஸ்ரீசக்ர வாஸினி
ஸ்ரீராஜ ராஜேஸ்வரி!
ஸ்ரீசக்தி பகவதி சித்ரூப சுந்தரி
சின்மயி சிவசங்கரி!
மாதா மனோஹரி மாமேரு பூஜையில்
மகிழ்வுறும் மாகாளியே!
வான்தேவர் முனிவரும் வணங்கிடும் தேவியை
வணங்கினேன் வருகதாயே!

நித்தமும் நெஞ்சிலே நினைவாய் நிலைக்கின்ற
நித்தியா தேவியம்மா!
வித்தகி யானஸ்ரீ வித்தியா தேவிகண்
வைசிவ தூதியம்மா!
ஸப்தமித் திதியிலே சார்வளர் பிறையிலே
உத்தமி ஓங்கி நிற்பாய்!
தேய்பிறை நவமியில் தேவிநின் திருவருள்
சேர்ந்திட வருகதாயே!

மலர்க்கரம் எட்டிலே வலப்புறம் கமலமும்
மழுவுடன் கத்தி, பாசம்
வளைக்கரம் நான்கிலே வாகாய், இடப்புறம்
ஒளிவிடும் 'ரத்னபாத்ரம்'
வலிவுகொள் கதையுடன் வாட்டமாய்க் கேடயம்,
பொலிவுகொள் பாசத்தோடும்
வடிவுகொள் வஞ்சியை வணங்கினேன், சிவதூதி
வாழ்விக்க வருகதாயே!

சிம்மாஸ னேஸ்வரி சிவதூதி அன்னையாய்
செந்தாம ரையமர்ந்தாய்!
சேவடித் தாமரை சிறுதாம ரைதாங்க
சேல்தாம ரைமலர்ந்தாய்!

ப்ரம்மாண்ட நாயகி பிந்துவில் நிலைகொண்ட
பார்வதி முக்கண்ணியே!
துன்மார்க்க ரால்வரும் துன்பங்கள் யாவையும்
துகள் செய்ய வருகதாயே!

நீதியும் தர்மமும் நிலைபெறச் செய்பவள்
நிதியங்கள் யாவும்தருவாய்!
நியாயமாம் விருப்பங்கள் நிறைவேற்றி வைத்திட
நிர்மலா தேவிவருவாய்!
ஆதியே! மதியத்து ஆதவன் ஜோதியே!
அன்னையே சிவதூதியே!
ஆபத்தில் காத்திடும் அம்பிகே! சித்திகள்
அருள்கவே! வருகதாயே!

நன்முத்து மணிசேர்ந்த நவரத்தி னங்களும்
மின்னிடும் மேனி கொண்டாய்!
பண்ருட்டி கண்டிகைப் பதியினில் ஸ்ரீநகர
மண்ணினில் மேவி நின்றாய்!
தர்மத்தின் தலைவியே ஜென்மத்தின் வினைதீர
தயைபுரி சிவதூதியே!
தெய்வமே மனமொழி மெய்சேர வணங்கினேன்
ஜெயந்தர வருக தாயே!

**அருட்கவி முத்துமணி**

# ஸ்ரீ த்வரிதா

ஆடும் மயிலின் தோகை தன்னை
அழகாய்த் தலையில் சூடிடுவாள்
நாகம் எட்டை அணியாய்ப் பூட்டி
நல்லருள் நாளும் கூட்டிடுவாள்
மேகம் தனிலும் மெல்லிய துகிலை
மேனியில் சூடிக் காத்திடுவாள்
பாசம், அங்குசம், அப்யம், வரதம்
பாங்காய்க் கைகளில் தாங்கிடுவாள்.

குடையும் கொடியும் மயிலாய் கொண்டு
குடிகள் தம்மைக் காத்திடுவாள்
கொடிய நஞ்சையும் குளிரமுதாக்கி
கொல்லும் சோகம் போக்கிடுவாள்
படையாய்ச் சிங்கம் கரடிகள் சூழ
பயத்தை தொலைத்து ஓட்டிடுவாள்
விடையும் அவளே விதியும் அவளே
வினைகள் தம்மைத் தீர்த்திடுவாள்

நீளும் ஆயுள், நிறைவாய்க் கல்வி
நேரிய வழி வரும் செல்வங்கள்,
தாளின் கவிதை, தடையிலா வார்த்தை
தரணியும் போற்றும் புகழ் சேர்க்கை
நோயிலா வாழ்க்கை, நல்லவர்கூடல்
நூதன மான திருப் பார்வை
யாவும் தருவாள் ஸ்ரீத்வரிதா தேவி
அவள் இன்னருள் பெறுவோம் மலர்தூவி;

**கவிஞர் அமுதன்**

# ஸ்ரீ குல சுந்தரி

செந்தா மரையில் மேவும் தாயே
சிந்தா மணியே ஜீவ னினொளியே
நந்தா விளக்கே மகமே ரன்னை
எந்தா யருள்க ஸ்ரீகுல சுந்தரியே!

ஆறு முகத்தில் அருளைப் பெய்தே
சேரும் அடியார் துயரம் போக்கி
பேறின் பிறையே சூடும் தேவி
சீரே யருள்கஸ்ரீ குல சுந்தரியே!

மூவா முதலே முக்கண் தேவி
சாவா மருந்தாய் திகழும் எங்கள்
தேவா மிர்தே ஆதியின் முதலே
கூவா தருள்க குல சுந்தரியே!

பதினெண் கணங்கள் சோதிக் கண்கள்
பதினிரு கரங்கள் பாவம் அறுக்க
வதியும் செம்மை இருமை மருந்தே
நிதியே யருள்க ஸ்ரீகுல சுந்தரியே!

நாதத் தொனியே பவளம் கமலம்
வேதக் கெண்டி கிண்ணம் விளங்க
மாது ளங்க னியுடன் ஞானம்
யாது மருள்க ஸ்ரீகுல சுந்தரியே!

இடது கரங்கள் வேத நூலும்
விடியல் மரையும் எழுது கோலும்
படலை சங்கு சின்முத் திரையும்
எடுத்தே யருள்க ஸ்ரீகுல சுந்தரியே!

கதிரும் நிலவும் சோதி ஒளியும்
துதிக்கும் ஒன்ப தாகுங் காளி
மதியைச் சூடி மகுடம் புனைந்து
கதியே யருள்க ஸ்ரீகுல சுந்தரியே!

இருக்கை யங்கை திருத்தாள் விழிகள்
உருக்கும் பொன்னின் உடலும் நாபி
பொருந்தும் கொங்கை செந்தா மரையே
விரும்பி யருள்க ஸ்ரீகுல சுந்தரியே!

கதியின் முதலே கலையின் பொருளே
உதிக்கும் நவமி உருகும் சப்தமி
துதிக்க, பேறு பதினா றளிக்கும்
பதியே யருள்க ஸ்ரீ குல சுந்தரியே!

ஒன்றே தெய்வம் உலகுக் கெல்லாம்
என்றே யருளும் இதயத் துடிப்பே
கன்றே யன்னக் கரைந்து நின்றேன்
இன்றே யருள்க ஸ்ரீ குல சுந்தரியே!

வெண்மை வடிவம் வாக்கு வன்மை
பொன்னின் மேனி பொருளை அளிக்கும்
கன்னல் நீலம் பகையைப் போக்கும்
கண்டிகை யன்னை பாதம் தொழவே!

**கவிஞர் குமரிச் செழியன்**

# ஸ்ரீ நித்யா

சத்தியங்கள் காணாமல் போகும்போதும்
சகத்தினிலே கொடுந்துயரம் வேகும்போதும்
பத்திரமாய்க் காப்பதற்குத் தேவிவந்து
பாராளும் பொறுப்பதனை ஏற்றிருப்பாள்!
நித்தியத்தின் நிஜமாகவே நிற்கின்றாள்
நீணிலத்து உருவாக இருக்கின்றாள்
சத்தியத்தின் வாசலிலே சதாகாலம்
செஞ்சுடராய்க் காத்துவரும் நித்யாதேவி!

ஆரியத்தின் மேன்மைக்குக் காவல்காக்கும்
அம்மாநீ! இதயத்தின் வசந்தவாசல்!
சூரியனின் பிம்பம்போல் நிறத்தைப்பெற்று
சுடரொளியில் ஈராறு கரங்களாலே
வாரித்தரும் பலமெல்லாம் கண்ணில்சேர்த்து
வருகின்றோம்! அம்மநின் கருணைதானே!
மாரிபோல் மனத்துள்வந்து பெய்துநிதம்
மனக்கவலை போக்குவதும் நீயேதாயே!

கஷ்டங்கள் கண்களிலே சோகம்கொண்டு
காரிருளில் வாழ்க்கையதை நடத்தும்போது
இஷ்டங்கள் இருந்தாலும் நடக்கவில்லை
இருள்தானே எமைச்சூழ காவல்காக்கும்!
நஷ்டங்கள் நஷ்டங்கள் நாளும்எம்மை
நாற்புறமும் சுற்றிவர உயிரலைக்கும்;
அஷ்டங்கள் மாசித்தியென எங்கள்மனமும்
ஆர்ப்பரிக்க அள்ளித்தா! நித்யாதேவி!!

**கவிக்கோ பால. இரமணி**

# ஸ்ரீ நீலபதாகா

நீலக்கல்லின் நிறமுடையாய்! பொழி
நிலவென முகமைந்துடையாய்!
கோலம் மிகுவிழி மூன்றென முகந்தொறும்
கொண்டாய்! எனையாட் கொண்டாய்!
ஞாலம் வளம்பெற ஈரைங் கரமுடன்
நீதிதனை அருள்கின்றாய்!
நீலபதாகா! உனைமனம் பாடும்!
நித்தமும் ஜெயமே கூடும்!

பாசம் கொடிதாமரை வில்முத்ரை
பரிவுடன் நீகரம் கொண்டாய்!
பாணம் முத்ரை அங்குசம் கத்தி
ஆயுதம் ஏந்தி ஆள்கின்றாய்!
மாமலர் அமர்ந்தாய்! நீலபதாகா!
மாசிலா மனதினில் நிறைந்தாய்!
நீலபதாகா நின்னருள் போதும்!
நித்தமும் ஜெயமே சேரும்!

முத்துடன் பவழம் ரத்னாபரணம்
உத்தமியால் ஒளிபெறுமே
சக்திகள் சூழ வித்தகிஆள
அற்புதம் அற்புதம் காணும்!
இத்தரை மீதே சத்தியம்வாழ
பொற்பதம் என்துணை ஆக!
வெற்றிகள் கோடி வாசலைத்தேடி
வந்திடச் செய் நீல பதாகா!

ஆயிரம் கற்றும் அறிவிலையெனிலும்
அன்னையே உனையறிவேனே!
காரியம் யாவும் நீ ஜெயம் தருவாய்!
கருணையை நான் உணர்வேனே!
யான்கரம் சேர்த்தேன் என்சிரம் மீதே!
என்சிரம் நின்பதம் தானே!
ஓம்நீல பதாகா! உன் நாமம் வேதம்!
உன்னருள் ஒன்றே போதும்!

**கவிஞர் வை.ரா.**

# ஸ்ரீ விஜயா!

நித்தமும் நிம்மதியை நினைப்பவர்க்குத் தருகின்ற
நெடியோயே! விஜயாவே! நெஞ்சினிலே எழுகின்ற
யுத்தத்தை நிறுத்துதற்கு உன்னருளே வேண்டுகிறேன்!
உணவுக்கும் உண்டாகும் உணர்வுக்கும் அல்லாடும்
சித்தத்தைச் சீராக்கும் ஜெயமாதா அருள்தருக!

செழுமையுடன் சேர்ந்ததொரு சிந்தனையை நீதந்தால்
இரத்தத்தைக் குடிக்கின்ற கலக்கங்கள் எல்லாமே
இல்லாமல் போயொழியும்! இன்பங்கள் தான்மலரும்!
சுத்தத்தை மறந்துவிட்டு அசுத்தத்தில் வாழ்ந்துவரும்
சூன்யமாம் வாழ்க்கையினை விட்டொழிக்க வைத்துவிடு!

பித்தத்தைத் தருகின்ற பெரும்புயலாய் எம்மூச்சு
பீறிட்டுப் போவதனால் தயங்காமல் வழிகாட்டு!
முத்தத்தில் பிறந்தவராம் மானிடர்க்கு நல்லதொரு
மூளைகொடு! மூச்சடைக்கும் எம்மீது விழிநாட்டு!
வழிதேடி உனை அடையப் பாதையிலே ஒளி கூட்டு!

**கவிதாயினி ஆண்டாள் பிரியதர்சினி**

# ஸ்ரீ சர்வ மங்களா

சீருயர்த் தாமரைப் பூமேவித் தண்ணருட்
கரங்களால் வழங்குகின்றாய்
சூரியன் தண் மதிச் சுடர் மிகும் விழிகளால்
சுகமேவ நோக்குகின்றாய்
கரிய நிறக் கூந்தல் மேல் ஒளிவீசும் மாணிக்க
மாமகுடம் தாங்குகின்றாய்
விரும்பியே பணிகின்றேன் சர்வமங்களாதேவி
வெற்றி நீ அருளு வாயே!

வலக் கரம் பாசமும் இடக்கரத்திலே அமுதும்.
வரதா பயக் கரங்களும்
துலக்கமுற இரு கழல்கள் மடித்து பத்மாசனம்
துய்ய நீ அமருகின்றாய்
கலக்க மற வழி நடைப் பயணத்தில் துணைவந்து
காத்திடும் சக்தி நீ யே!
இலக்கு நீ! சர்வ மங்களா தேவியே
எப்போதும் போற்றுகின்றேன்.

பூசையும் வேள்வியும், புகழ்ந்திடும் சொற்களும்
போற்றிடும் அன்னை நீயே!
நேச மிகு பக்தியும், நினைவு, செயல் சக்தியும்
நீங்காதளிக்கும் தாயே
ஈசனார் தேவிக்கும், இணையிலா எழில் மேவி
மாமேரு வாழும் நீ யே
தேசு மிகும் சர்வ மங்களா தேவியே
திருவருள் புரிக தாயே!

பகலிலும் இரவிலும், பண்ணிடும் பயணத்தில்
பக்க துணையாகி வருவாய்
இகவாழ்வில் எப்போதும் இடரின்றிக் காக்கவுன்
எழில் விழியால் கருணை புரிவாய்
தகவுறவே மாமேரு தளபதியில் ஒருவராய்
தரமோங்கும் சக்தி நீ யே
புகலெனக்கு நீ, சர்வ மங்களா தேவி நின்
பொற் பாதம் போற்றுகின்றேன்.

காரணம் தெரியாத பிறவிப் பிணி நீங்க
கனிந்தருள் கூட்டு தாயே
நாரணன் தங்கையாய் நான்மறைகள் போற்றிடும்
நலமேவும் தேவியுடனே
தோரணம் ஆடிடும் கண்டிகை ஸ்ரீ நகரம்
மாமேரு கோயில் தனிலே
பூரணப் பொலிவுறும் சர்வமங்களா தேவி
பொற் கழல்கள் போற்றுகின்றேன்

**- கவிஞர். மீ. விசுவநாதன்**

# ஸ்ரீ ஜ்வாலா மாலினி

சுவாலா மாலினித் தாய்போற்றி
சுழலும் உனது வாள்போற்றி
அவாவ கற்றுன் அங்குசத்தால்
அருள்க பார்வை முக்கண்ணால்
சுவாசம் அருளும் தாய்போற்றி
சுகமே தருவாய் பாசத்தால்
நிவாசம் புரிவாய் எம்நெஞ்சில்
நீயே எங்கள் சம்பத்து!

ஆறு முகத்துத் தாய்போற்றி
ஆறு முகனின் தாய்போற்றி
வேறாம் உருவக் கணபதியை
வேறாய்க் கருதாத் தாய்போற்றி
மாறு கொண்ட மனிதரையும்
மாற்றும் நினது வில்போற்றி
ஊறே தும்இல் வாழ்வுதனை
உலகோர்க் கருளும் தாய்போற்றி!

நேச முடனே வணங்குகிறோம்
நெஞ்சில் நீயே உறைகின்றாய்
பாசத் துடனே வாழ்த்திடுவாய்
பாரில் நாங்கள் உயர்ந்திடவே ;
வாச மிக்க மலர்கொண்டு
வந்து துதிகள் செய்கின்றோம்
மாச மிரண்டு தொழுதிட்டால்
மாசை அகற்றும் தாய்போற்றி!

வடிவுக் கரசி நீவாழ்க
வண்மை உருவே நீவாழ்க
மடியும் எங்கள் துன்பமெலாம்
மகத்தாம் மேரு மண்டபத்தில்

நொடியும் நின்னைப் பிரியாத
நோன்பு கொண்ட எங்களது
வடியும் கண்ணீர் துடைப்பாயே
வந்தே சொன்னோம் பல்லாண்டு!

தூய்மை யான கோவினிலே
துலங்கும் ஜ்வாலா மாலினியே
தாய்மை மனத்தால் எங்களையே
தகவாய்க் காக்கும் தாய்போற்றி
வாய்மை எமக்குத் தருவாயே
வாழும் முறைமை அருள்வாயே
சேய்மை இடத்தில் இருந்தாலும்
சேமம் சேர்க்கும் தாய்போற்றி!

நெருப்பில் தீமை எரிப்பவளே
நேர்மை எமக்கு அளிப்பவளே
விருப்பும் வெறுப்பும் அற்றவளே
விரதம் இருந்த எங்களுடை
இருப்பு நாள்கள் அனைத்திலுமே
இன்பம் கூட்டும் தாய்போற்றி
கருப்பு அகற்றி கலியுகத்தைக்
காக்கும் தாயுன் தாள்போற்றி!

போற்றி நின்னைத் துதிப்போர்க்கு
போகம் அருளும் அம்மைநீ
தூற்றி உன்னை நினைப்போர்க்கும்
துயரம் துடைக்கும் துர்க்கைநீ
மாற்றி உன்னைக் காண்போர்க்கும்
மாறா நன்மை அளிப்பவள்நீ
போற்றி நாங்கள் பாடுகிறோம்
பொலிக ஜ்வாலா மாலினியே!

**கவிஞர் கலியன்**

# ஸ்ரீ சித்ரா

காலையில் வான்மீது வருகின்ற கதிர்போலக்
காண்கின்ற ஒளியை உடையாய்;
கவினார்ந்த மதிபோல ஒளிசிந்தும் திருவதனம்
காட்டியே கருணை பொழிவாய்;
சாலவே கைகளில் பாசாங்கு சத்துடன்
தரிப்பை நீ அபய வரதம்;
தாரணியை அன்புடன் நோக்கி நிதம் காக்கவே
தாங்கு வாய் மூன்று விழிகள்;

கோல முற வண்ணங்கள் பல கொண்ட பட்டாடை
கொடி இடையில் அணிந்தி ருப்பாய்;
குறையாத அருள்வளம் கொடுக்குமென் அன்னையே;
சித்திராம் பிகாதே வியே!
காலமது பௌர்ணமிப் பிரதமையில் தொழுகிறேன்
கனிவோடு தயைபு ரிந்தே
கலைதந்து நி தி தந்து கசடற்ற மனம்தந்து
காப்பாற்ற வேண்டும் எனையே!

போற்றியே நின்னரும் புகழ் பாடு வோர்க்கெலாம்
புதையலும் காட்டி நிற்பாய்;
புகழென்ற பேரி மய உச்சியில் ஏறவே
புதுவழிகள் எனக்கு ரைப்பாய்;
ஆற்றலோ டெதனையும் அரை நொடியில் செய்யவே
அற்புதச் சக்தி அளிப்பாய்!
அன்பெனும் நதியிலே விளையாட வைத்து நீ
அருளோர் டணைத் தெ டுப்பாய்

ஊற் றெனும் செல்வத்தில் உயர்வோடு வாழ வே
உறுதியாய்த் துணையி ருப்பாய்!
உனையன்றி உலகிலே ஒருதுணையும் காணகிலேன்
சித்திராம் பிகா தேவியே!
காற்றுள்ள மட்டும் உன் தாள் மலரை நான் தொழக்
கருணை புரிந்து நித்தம்
கலை தந்து நிதி தந்து கசடற்ற மனம் தந்து
காப்பாற்ற வேண்டும் எனையே!

**கவிமாமணி புதுவயல் செல்லப்பன்**

# ஸ்ரீ லலிதா பரமேஸ்வரி

காமாட்சி அன்னையே! கருணை பொழி தேவியே!
காலங்கள் ஆன திருவே!
தீ மேவு செந்நிறம்-திருக்கரம் நான்குடன்
திகழ் மேனி தாங்கும் உருவே
பூ மேவு நான்முகனும் சங்கரனும் திருமாலும்
போற்றிடும் தாயும் நீயே!
மாமேரு பிந்துவின் மகாநித்ய தேவியே
மனங் கவர் லலிதாம்பிகே!

கோலங்கொள் ஒன்பதாம் கோணத்துள் ஒளிகூட்டிக்
கொலுவீற்றிருக்கும் தாயே!
சீலங்கொள் பதினைந்து ஸ்ரீநித்ய தேவிகள்
சிறப்போடு போற்றும் மாயே!
நீலங்கொள் வெளியிலே கோலங்கொள் அண்டங்கள்
நிலைபெறச் செய்யும் நீயே,
ஞாலங்கொள் புகழ்மேவி நான்மறைகள் போற்றிடும்
நாயகி லலிதாம்பிகே!

இருமலர்க் கரங்களில் துலங்கிடும் அங்குசமும்
இலங்கிடும் பாசமுடனே
ஒருகரம் கன்னலும் மறுகரத்திலே புஷ்ப
பாணமும் ஏந்துகின்றாய்
அருள் விழிக ளிரண்டுடன் பிறைநெற்றி விழியோடு
அதரங்கள் நகை பூக்கவே
தருகின்ற எழில்முகம் தாங்கிடும் மலர்க்கிரீடம்
தரிக்கின்ற லலிதாம்பிகே!

கஞ்சமலர் மீதிலே காட்சியருள் தேவி! இடக்
கழலினைக் கமலம் தாங்க
பஞ்சனைய வலக்கழல் பதுமத்திலே மடங்க
பட்டுடை யணிகள் ஓங்க

நெஞ்சமுழுதும் எண்ணித் தஞ்சமடைவோர்க்கெலாம்
நினைக்கின்ற செயல் ஓங்குமே
அஞ்சே லென்றருள் பொழியும் திரிபுர சுந்தரி
அன்னையே லலிதாம்பிகே!

காஞ்சீபுரத்தருகில் தாம்பரம் படப்பையிடைக்
கண்டிகை ஸ்ரீநகரிலே
மாஞ்சோலைக் குயிலோடு, பூஞ்சோலைக் கிளிபாட
மகிழ்வோங்கும் தலமீதிலே
வாஞ்சையுடன் சுவாமி முருக பூஷணம் அன்பு
வளர்ந்தோங்கும் புகழ்க் கோயிலாய்
தீஞ்சுவைப் பெயர்மேவும் மாமேரு நிலையத்தில்
திகழ்ந்திடும் லலிதாம்பிகே!

பதினாறு கலைகளின் அரசியே! வான்கதிர்
பதிக்கின்ற சோதி நீயே!
விதியோடு சமரிடும் கதிமாற்றி வாழ்க்கையை
விளங்கிடச் செய்யும் தாயே!
நிதியோடு பதினாறு நிறை செல்வம் யாவையும்
நீங்கா தளிக்கும் திருவே
பதியாகும் படப்பையில் துதிபாட ஸ்ரீநகரம்
பொலிகின்ற லலிதாம்பிகே!

**கவிமாமணி மயன்**

இந்நூல் வெளிவரப் பொருளுதவி செய்த
வள்ளல், தொழிலதிபர்
**அரிமா ஏ.எல். செல்லையா**
அவர்களுக்கு எமது நன்றி

## Sri Mah Meru Dhyunu Nilayam

PANRUTTI KANDIGAI — SRI NAGARAM

55 km from Madras
25 km from Kanchipuram
10 km from Wallajahbad
15 km from Sriperumbudur
25 km from Tambaram

S
E W
N

TRIVENI ACADEMY
PANRUTI-KANDIGAI
MANNIVAKKAM
ORAGADAM
KANCHIPURAM
WALAJAHBAD
PADAPAI
VALLAKOTTAI MURUGAN
VANDALUR
CHINGLEPET
G.S.T. ROAD
MUDICHUR ROAD
SRIPERAM BADUR
TAMBARAM
MADRAS

Head Office:
Mah Mehru Trust,
4, Hanumantha Road,
Balaji Nagar,
Royapettah, Madras 600 014.
INDIA
Ph: 826 12 54.
Fax:

BUS ROUTE FROM MADRAS HIGH COURT
NO.79, 79A, 110 (10 MIN.ONE BUS)
VIA MOUNT ROAD, TAMBARAM, PADAPAI
STOP AT: PANRUTI-KANDIGAI.

சென்னை - தாம்பரம் - படப்பை - காஞ்சிபுரம் செல்லும் நெடுஞ்சாலையில்
பண்ருட்டிக் கண்டிகை கிராமம் - ஸ்ரீ நகரத்தில் அமைந்துள்ள



# ஸ்ரீ மா மேரு தியான நிலயம்



ஸ்ரீ வித்யா உபாசகர் சுவாமி முருகபூஷணம்
டிரஸ்டி - ஸ்ரீ மாமேரு டிரஸ்ட்